# ஈட்டி முனை

ஆசிரியர் :

கோரநாதன்



சாந்தி நிலையம்

துறையூர் . . . . . திருச்சி ஜில்லா

சாந்தி நிலைய வெளியீடு 3
முதல்பதிப்பு ஏப்ரல் 1947
விலை அணா எட்டு

# நான் சொல்வது

'ஈட்டிமுனை' சாந்தி நிலையத்தின் மூன்றாவது வெளியீடு. எனது மூன்றாவது புத்தகமும் கூட.

இரண்டாவது வெளியீடான 'கோயில்களை மூடுங்கள்' எரிமலை வெளியீடு 'படவுலகில் கடவுள்கள்' இரண்டும் பிரசுரமான ஒரே மாதத்தில் விற்பனையாகிவிட்டது. பதிப்பகத்தார்களுக்கும் எனக்கும் தமிழ்நாடு அளித்த மகத்தான கௌரவமாகும். இன்னும் தேவைக் குரல்கள் எழுகின்றன. ஆனால், போட சந்தர்ப்பங்கள் இடம் தரவில்லை. அதற்குள், 'ஈட்டிமுனை' எழுத வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. தமிழ் செழிக்க. தமிழர் வளமடைய. தமிழர் வாழ. இலக்கியம் எப்படி வளர வேண்டும், பேனாப் பெரியார்களின் கடமை என்ன என்பதை அழுத்தமாகச் சொல்கிறது இந் நூல். எனது முந்திய இரு புத்தகங்களைப்பற்றி தங்கள் கருத்துக்களை அறிவித்த அன்பர்களுக்கு என் நன்றி. இந் நூல் பற்றிய விமர்சனங்களையும் நான் வரவேற்கிறேன், வணக்கம்.

கோரநாதன்.

ஊழியன் பிரஸ். துறையூர்.
Q. H. No. TY. 40. C. 2000

# ஈட்டி முனை

## 1. சங்கநாதம்

*திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்*
*விண்ணோடும் உடுக்களோடும்*
*மங்குல் கடல் இவற்றோடும்*
*பிறந்த தமிழுடன் பிறந்தோம்*
*நாங்கள், ஆண்மைச்*
*சிங்கத்தின் கூட்டமென்றும்*
*சிறியோர்க்கு ஞாபகம் செய்*
*முழங்கு சங்கே!* (பாரதிதாசன்)

'கன்னித் தமிழ் அணங்கு கரிமுடிஞ்சு போம் என்று' கனவு கண்டு வருகிறது ஒரு கூட்டம் — தமிழ் நாட்டில் தாங்கள் எழுதவில்லையென்றால்!

'ஆதிசிவன்' பெற்றுவிட்டதாகவும் அகத்தியன் எனுமோர் ஆரியன் இலக்கணம் கண்டதாகவும், அந்தப் பரம்பரையிலே வந்த ஒரு சிலரால் தான் தமிழ் வாழ்கிறது என்றும் கனவு காண்கிறது ஒரு கும்பல். கண்டு வந்திருக்கிறது. இன்னும் கனவு கண்டு தங்களையே போற்றிப் பெருமகிழ்வு கொண்டு வருகிறது.

இருட்டறையிலே ஒண்டி, சுயப் பிரதாபக் கனவு காண்பதுடன் கிடந்தால், அறியாப் பேதைகள் என அனுதாபம் காட்டலாம். சுயநல கருத்

துடன் ஒரு சிலருக்கு தாஸர்களாகி 'பூர்ஷ்வா' இலக்கியத்திலே இன்பம் மாந்திக் கிடந்தால் 'சுப்ர தீப்ங்கள், கரண்டு கரண்டு அவியட்டும்!' என்று கவனியாது ஒதுக்கிவிடலாம்.

எழுதுகிற ஒரு சிலரை எள்ளி நகைத்துக் கெக்கலி கொட்டினாலும் கூட 'அறிவற்ற அந்த காரத்திலே கிளைகூட்டும் ஆந்தைகள்' என்று தள்ளிவிடலாம்.

ஒருசிலரை 'கோஷ்டி' சேர்த்து பழமைக்கும் முன்னைப் பழமைகளை 'புதுமெருகு' என்று ஏட்டில் தீட்டி நாட்டைக் குட்டிச் சுவரா யடிப்பதுடன், விழிகண் குருடராய், பிள்ளைப் பூச்சிகளாய், 'உலகமே இருண்டு விடும்' என்ற மனோபாவத்துடன் வாழும் பூனைகளாய் திரிவதுடன் இலக்கியத்தை, தமிழை, தமிழகத்தை சாக்கடைத் தேக்கமாய், காம மேதிகள் புரளும் சேற்றுக் குட்டையாய் மாற்றி வந்திருக்கிறது — வருகிறது சுயநலக் கும்பல். பிறரையும் ஆட்டிவைத்து இலக்கிய சாம்ராட்டுகளாய் காலம் தள்ளக் கனாக் காண்கிறது. பிறரைக் குறைகூறுவதுடன், இலக்கியம் சிருஷ்டிக்க வல்ல பிரம்மாக்கள் தாங்களும் தங்கள் பட்டயம் பெற்ற ஒரு சிலருமே — தங்கள் 'சங்கப் பலகை' அங்கீகரித்த ஒரு சிலரே — என எண்ணி ஒலி பரப்பவும் துணிகின்றது! என்ன பேதமை!

இவ்விதம் தனித்தனிக் கும்பல்களாக தலை தூக்கி நிற்கின்றன தமிழ் நாட்டிலே. இவை தவிர உருப்படியாய் தமிழ் இலக்கியத்துக்கு விமோசனம் பிறந்திருப்பதாக சரித்திரம் காட்டவில்லை, புராணங்கள் புழுகு என்றோம். அப் புழுகுகளை

ஆராய்ந்து வித்து தேடி, அதில் தங்கள் குள்ளக் கருத்துகளைக் கூட்டி புதுப்புராணம் சிருஷ்டித்து இலக்கியம்' என்று லேபிள் ஒட்டுகிறது ஒரு கும்பல். 'கம்பன் பாடியதில் இடைச் செருகல்கள் புகுந்து விட்டன; வெட்டித் தள்ளுவோம் என வம்புகள் செய்வதும், வம்பரைப் போற்றிப் புகழ்வதுமாக 'இலக்கிய சேவை' புரிகிறது ஒரு கும்பல்.

தீபாவளிக்கு மாமி வீடு சென்று புது மனைவியைப் பார்த்துப் பல்லிளிக்கும் கயவர்களைப் பற்றிய கதைகள் டிராமிலும் பஸ்ஸிலும் முட்டி மோதிப் பின் தனியறையிலே கட்டிப் பிடித்தணைக்கும் காம நாடகம் ... 'காதல், காதல்' என்று கண்ணடிக்கும் பெண்களையும் ஷோக் சுந்தரங்களையும் சந்திக்கச் செய்யும் சதிகள் — இப்படிக் குப்பைக் கதைகள் மலைமலையாய் குவிகின்றன ஓர் புறம்.

களவாணித்தனமும், டம்பாச்சாரித்தனமும், இலக்கிய விபசாரமும் பெருத்து வருகிறது இன்றையத் தமிழகத்திலே.

புதுமையில்லை. புதுயுகக் கருத்துக்களை வளர்ப்போர் அதிகம் இல்லை. சிந்திக்கத் தூண்டும் எழுத்து ஏராளமாகப் பிறக்கவில்லை, சிந்தனை செய்து எழுதுவோருக்குப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதால். கலை வளர வழியில்லை, அறிவு பெருக வழிகாட்டுவோர் இல்லை.

மேனி மினுக்கி, சதிர்த் தாசி போல சந்தையிலே மின்னுகின்ற பத்திரிகைகள் பெருத்து விட்டன. அதிகமாகின்றன. ஆனால், விஷயத்தில் புதுமையில்லை. எழுச்சி தரும் எண்ணங்கள் அதிகமில்லை, நலம் பயக்கும் நயங்கள் நிறைய இல்லை.

காமம் இருக்கிறது. பெண் அங்க வர்ணனைகள், லீலா விநோதங்கள், அடுப்பங்கரை அந்தப்புர அதிசயங்கள், எல்லாம் உண்டு. கடவுளரின் லீலைகள் 'புதுடிசைனில்' வருவதுண்டு. அகல்யை கதை அபிநவ புராணமாய் ஐம்பதாவது தடவையாக அளக்கப்படுவது உண்டு. முனிகள் கதை உண்டு. ராமபஜனையும் உண்டு.

இவற்றால் பயன் ஏதும் உண்டா? சிந்திக்கும் வாசகன் கேட்கின்றான் இன்று. இதையே தான் கேட்டார் நமது கவிஞர் அன்று:

கடவுள் துவக்கிக் கொடுத்த - பல
கவிதைகள், பதிகங்கள் செப்பிய பேர்கள்
கடவுள் புவிக் கவதாரம் - அந்தக்
... ... ... .... ...
கதைகளினாலும் சுகங்கண்ட துண்டா?

அடிமை தவிர்ந்ததும் உண்டோ? - அன்றி
ஆதிமுதல் இந்தத் தேதி வரைக்கும்
மிடிமை தவிர்ந்ததும் உண்டோ? - அன்றி
மேல்கீழ் என்பதைக் கண்டதும் உண்டோ?
துடிக்கவும் நீரற்றிருக்கும் — ஏழைக்
கூட்டத்தை எண்ணாமல், கொடுந்தடியர்க்கு
மடங்கட்டி வைத்ததினாலே - தம்பி!
வசம் கெட்டுப் போனது நம்து நன்னாடு.

அவ்வளவு தானா? அந்தகாரத்தை விதைக்கின்ற மதவாதிகளையும் மடத்தார்களையும் போலவே எழுத்தாளர்களும் அறிவுக்கு இருட்டடிப்பு போட்டு வந்திருக்கிறார்கள். இன்னும் போட விரும்புகிறவர்கள் பெரும்பாலோர், அவர்கள் இலக்

கிய பிரம்மாக்களாக இருக்கலாம். ஆனால் அறி வொளி பரப்பும் சிந்தனையாளர்கள் என்று எப்படிச் சொல்ல முடியும்?

'அழியாத மூடத் தனத்தை - ஏட்டில்
அழகாய் வரைந்திடும் பழிகாரர் தம்மை
முழுதாய்ந்த பாவலர் என்பார் - இவர்
முதலெழுத் தோதினும் மதியிருட்டாதம்!'

முதலெழுத்து மட்டுமல்ல — முக்க முழுக்க இவர்களின் எழுத்துக்களையே பொழுது போக்குக் காகவும், இலக்கியம் எனவும் படிக்க வேண்டிய தொல்லை தமிழ் நாட்டுக்கு ஏற்பட்டு விட்ட காரணத்தால் — இவர்கள் ஏற்படுத்திவிட்ட தளைல் — சமுதாயம் அறிவு வளர்ச்சியற்று, சிந்தனை விழிப்பற்று தூங்கிக்கிடக்கிறது.

இனியும் தூக்கத்திலேயே ஆழ்த்தவேண்டும் என்று சிலர் விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் எண்ணம் செல்லுபடியாகாது, காலம் மாறி வரு கிறது. புதுயுகத்தின் பொன்னொளி எங்கும் கால் வீசி மிளிர்கிறது. இருள் விரும்பும் இலக்கிய ஆந்தைகள் பொந்துகளில் பதுங்க வேண்டிய காலம் வந்துகொண்டிருக்கிறது.

அறிவின் சன்னதியில் நின்று சிந்தனைச் செல்வர்கள் சங்கநாதம் செய்கிறார்கள், எழுச்சி முரசு கொட்டி ஆர்ப்பரிக்க ஆரம்பித்து விட்டார் கள். தமிழும் தமிழரும் உயர்நிலை மீண்டும் பெறக் கொடி கட்டியாயிற்று.

புதுயுக உதயத்தால் கண் கூசுகிற சில பொரு்மைப் பூனைகள் கிண்டல்கள் எறிவதிலும்

வசைமாரி பொழிவதிலும் ஆத்ம திருப்தி தேடு கின்றன. சின்னப்புத்திக்காரர்கள் எனச் சிரித்து 'பெரியதனம்' பண்ண முயல்கின்றன.

இப்படி குறுக்குப் பாதையில் விழுந்து தற் காலிகமாகக் கவனம் பெற முயல்வது வீணத்தனம் தவிர வேறு என்ன! இதிலே காலத்தை வீணுக்கு வதைவிட காலத்துக்கு ஏற்ற கருத்துகளை பரப்ப முயல்வதன்றோ அறிஞர் கடமை. இதை உணராத வரை உருப்படுவ தெங்கே!

# 2. பாச்சா பலிக்காது!

*உணர்வெனும் கனலிடை*
*அயர்வினை எரிப்போம்*
*'ஒரு பொருள் தனி' எனும்*
*மனிதரைச் சிரிப்போம்!* (பாரதிதாசன்)

இலக்கியம் என்பது தனிப்பட்ட சிலரின் பாத்தியதை என்ற நம்பிக்கை செல்லுபடியாகாது. என்றும் எங்கும் எடுபடுகிற சித்தாந்தமும் அல்ல.

தமிழ் மொழி தனியான சங்கங்களின், மன்னர்களின் வித்துவான்களின் செல்லப்பிள்ளை என்ற எண்ணம் நிலவி வந்த காலம் ஒன்று உண்டு. மலையேறிப் போன அதைப் போலவே, அதைவிட மோசமாய் தூள் தூளாகி மண்ணோடு மண்ணாக்கப் படும் இந்த 'இலக்கியம் கருவிலே திரு உடையார்' சிலரது கலைச் சொத்து என்கிற கவைக்குதவாத பேச்சும்!

எதையும் குள்ளக் கருத்துடன் சுயநலத்துக்கு கள்ளமனத்தினர் பயன்படுத்த எண்ணும் போது, சாதாரண மக்களின் கையிலேயிருந்து பதுங்கிவிட நினைக்கும் போது, அதற்கு தெய்வீகப் பூச்சு பூசி விடுகிறார்கள். கடவுளே கற்பித்தது என்று அளக்கிறார்கள். இன்னும் மாயாஜால வித்தைகளை எல்லாம் அடுக்கி மழுப்புகிறார்கள்.

செத்த மொழியாகிவிட்ட சம்ஸ்கிருத்தை வேத பாஷை யென்று சொல்லி தனிப்பட்ட கும்பலின் சொத்தாக்கி சாகஅடித்த மூளைகள் தான் தமிழை

யும் கைலயங்கிரிச் சிவன் சிருஷ்டித்ததாகவும், ஆரிய அகத்தியன் பண்போடு வகுத்ததாகவும் 'கண்கட்டி வித்தை' காட்டிப் பதுக்கியிருக்க வேண்டும்.

தமிழைப் பயில்பவர்கள். காவியமும் இலக்கியமும் எழுதுகிறவர்கள் கடவுளின், காளி முதலாம் சில்லறைத் தேவுகளின் கருணை கடாட்சமோ, எச்சில் தாம்பூலமோ, நாக்கிலே சக்கரமோ பெற்றிருக்க வேண்டும் என்று புழுகி மக்களை மயக்கினார்கள். அறிவுக்கு இருட்டடிப்பு போட்டார்கள்.

காவியங்களை எழுத தொந்திக் கணபதி தந்தம் முறிந்துக்கொண்டு வந்ததாகவும். சரஸ்வதி அம்மை இடைச்சி போல் வேடமிட்டு வந்ததாகவும் கல்சிலைகள் வாய்திறந்து முதலடி எடுத்துக் கொடுத்ததாகவும் அபாண்டப் புழுகுகளை வளர்த்து சாதாரண மக்களை தங்கள் சொல் வன்மையில் அடக்கி வந்திருக்கிறார்கள்.

அவர்கள் மதத்தையும், கடவுளர்களின் லீலைகளையும், பிற மதங்களை எதிர்க்கவும், தங்கள் சாமி பெரிய சாமி என நிரூபிக்கவும் ஆயிரமாயிரம் அற்புதச்சித்துவிளையாடல்களை கற்பித்து வரைந்து தள்ளினார்கள். பாமர மக்களை பிரமிக்கவைத்து. ஏமாறச் செய்து தாங்கள் ஏற்றம் கொண்டார்கள்.

மதத்தையும் கடவுளையும் கருதாத பெருநிலக் கிழவர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் முட்டாள்தனமாக முல்லைக்குப் பொன்தேரும் மயில்களுக்குப் போர்வையும் அள்ளி விசிறும்படி ஊதாரித்தனம் பெற்றிருந்த சீமான்கள் முதலியோரை தம்வசம் இழுக்க, கிராமின்னுள்களையும், கிசநாகக்

கன்னி போன்ற வல்லியிடை வஞ்சியரையும் கண்டு காமுற்று கலவி பண்ணிக் களித்த பாட்டுடைத் தலைவனுக்கு பிரபந்தங்கள், மடல்கள், உலாக்கள் என வகுத்து பணம் பெற்றுக் கொழுத்தார்கள் ஓர் சிலர்,

காம ரசம் சொட்டுகிற காவியங்களுக்கு வரவேற்பு கிடைக்கிறது, பணமும் கிடைக்கிறது என்று கண்ட ஓர் சிலர் செப்புக்கட்டிச் சிலைகளை உலா வர விட்டு வர்ணித்து, அச்சிலை கண்டு மின்கொடி மங்கையர் காமுற்று மெலிந்து பித்தியாகிக் கடவுளையே அணைந்து மேலுலகம் சென்றதாகக் காவியங்கள் சாற்றி வைத்திருக்கிறார்கள்.

பக்திப் பாடல் என்றும், உள்ளம் உருக்குகின்ற வாசகம் எனவும் பலப்பல எழுதினார்கள். இனிய தமிழில் எழுதினார்கள். தங்கள் மன அரிப்பையோ, பணம் தருவோர் தலையசைப்பையோ பெறுவதற்காக அல்குல் முதலாம் அங்க வர்ணனைகளை அழகழகாக, பக்கம் பக்கமாகப் பாடிவைத்தார்கள். 'குத்துவிளக்கெரிய கோட்டுக்கால் கட்டில் மேல், மெத்தென்ற பஞ்சசயனத்து நப்பின்னை கொங்கை மேல் கிடக்கும் மலர்' மார்பழகர்களையும் 'கச்சற நிமிர்ந்து பூன்பணைந்து கறுத்து வீறு கொண்டெழுந்து புடைத்த (இன்னும் பல அடிகளுக்கு எப்படி எப்படியெல்லாமோ ஜமாய்க்கிற) கொங்கை மங்கையர்'களைத் தேவிகளாகப் பெற்ற கடவுளர்களையும் உள்ளம் உருகப்பாடி வைத்து, மொழியை இருட்டறைக்குள்ளே ஒடுக்கிவிட்டார்கள்.

சுவட்டை நீக்கி சிந்தித்து, உண்மைகளை விளக்க வந்த ஒரு சிலர் — தொழிலால் எங்கிலையில் இருப்பி

னும் அறிவால் உயர்ந்த உத்தமர்கள் — 'நேரிய வாழ்க்கையை உயர்த்துகின்ற, சிந்திக்கச் செய்கின்ற அறிவு நூல்கள் இயற்றும் போது, சுயநலக் கும்பல்! தங்கள் வேலையைக் காட்டி வந்திருக்கிறது,

உலகெலாம் போற்றும் அறநூலாம் திருக்குறள் தீட்டியவர் — வள்ளுவ குலத்தில் வந்து நெசவுத் தொழில் புரிந்த அறிஞர் — பார்ப்பனனுக்கும் புலைச்சிக்கும் பிறந்தவர் என்று கதைகட்டிவிட்டிருக்கிருர்கள். மனிதனே கோயில். அன்பே கடவுள் பரோபகாரமே மதம் எனத் 'திருமந்திரம்' கண்ட மூலர் — மாடுகள் மேய்த்து வாழ்ந்த இடையர் என்பதை ஒப்புக்கொள்ளத் துணியாத பச்சோந்திக் கும்பல் வடநாட்டிலிருந்து வந்த ஆரிய முனி செத்து விழுந்த இடையன் உடலிலே கூடுவிட்டுக்கூடு பாய்ந்து, கதறிய பசுகளுக்கு புல் வழங்கி, பின் ஆன்மாக்கள் உய்ய அருள் மொழி வழங்கினுர் என்று அளந்திருக்கிருர்கள்.

இப்படி எவ்வளவோ தகிடுதத்தங்கள் இலக்கிய கர்த்தாக்களைப் பற்றி! எல்லாம் இலக்கியம் தனிப்பட்டவர்களின் தெய்வீகவேலை என்று பரப்புவதற்காக.

காலம் இத்தகைய கும்பலுக்குச் சாவுமணி அடித்து வந்திருக்கிறது என்ருலும் ஆழக் குழி தோண்டிப் புதைத்து மேலே சமாதி எழுப்பவில்லை இன்னும்! குழிபறிக்கப் பட்டு வருகிறது. காலப் போக்கிலே சமாதியும் எழுப்பப்பெறும். விழிப்புற்ற புதுயுக மக்கள் எத்தர்களை போஷித்துக்கொண்டிருக்க மாட்டார்கள், தங்களை ஏமாந்தவர்களாக்கி தாம் உயர்ந்தோர் எனப்பகட்டி அலைகிற யாரையும் மனித சமுதாயம் வாழ்த்தி வணங்கிக் கொண்டி

ராது. சில காலம் ஏமாற்றலாம். எல்லோரையும் எல்லாக் காலத்திலும் ஏமாற்றி ஏற்றம் கொள்ள இயலாது என்பதை காலம் உணர்த்தி வருகிறது.

ஆயினும், பழமை விரும்பிகள் பலர், காசுக்குச் சொல்வளர்க்கும் சிலர், கனவுக்குக் கும்பிடு போடும் கூட்டம், காமத்தை பூஜிக்கும் பேயர்கள் அநாகரிகக் கற்பனைகளை, புராணப் புழுகுகளைப் போற்றிப்பாடும் பித்தர்கள் இன்னும் இருக்கிறார்கள்.

எழுச்சியுற்ற இளைஞரை, விழிப்புற்ற சமுதாயத்தை, மக்களை மனிதராய் வாழவைக்கும் அறிவு விருந்து அளிக்கத் துடிக்கின்ற சிந்தனையாளர்களைப் பற்றி புறம் பேசி, வசை பாடி, கெக்கலித்து, இலக்கிய சேவை செய்து விட்டதாக இறுமாந்து போகிறார்கள்.

உலகைப் பார்ப்பதில்லை. உண்மைகளை உணர்வதில்லை. காலவேகத்தைக் கருதுவதில்லை. கலாசார உயர்வை மதிப்பதில்லை. மக்களின் பண்பை எண்ணுவதில்லை. மொழியின் மேன்மையை நினைப்பதில்லை, விஞ்ஞானம் முன்னேறுவதை, அறிவு அகண்டமாவதை, ஆராய்ச்சிகள் பெருகி மல்குவதை ஆராய்வதில்லை. சரித்திரம் மாற்றியமைக்கப் பெறுவதை சிந்திப்பதில்லை. மண்ணோடு மண்ணாய் உழன்ற மக்கள் நிமிர்ந்து எழுந்து 'மனிதரில் மனிதர் நாமே' என்று உரிமைக் குரல் கொடுத்து, 'வெற்றி முழக்கம் செய்து வீறுகொண்டுவிட்டதைக் காண்பதில்லை.

குறுகிய எல்லைக்குள்ளே, எட்டடிக் குச்சுக்குள்ளே, நாலு சுவரின் நடுவிலே ஒடுங்கி, காப்பியும் சிகரெட்டும் வெற்றிலையும் புகையிலை

யும் — மதுவும் – சுவைத்து மங்கையர் பற்றி எண்ணி யும் பேசியும், பிறர் வம்பு பேசியும், அவை பற்றி ஏட்டிலே தீட்டியும், கதைகள் எழுதி இலக்கியம் சமைத்தோம் என்று அகந்தைகொண்டு வாழ்கிறார் கள் இன்றைய எழுத்தாளர்களில் பெரும்பாலோர்.

உலகம் தங்களைச் சுற்றி அடங்கிவிட்டது என்று கருதும் 'இலக்கிய சாம்ராட்டுகள்' தாமே உலகம் என்று தறுதலைத்தனம் பெற்று, பிறரைத் துச்சமாய் மதிப்பதும், தம்மைத் தவிர வேறுயா ரால் இலக்கியம் சிருஷ்டிக்க இயலும் என்றும் கொக்கரிக்கின்றார்கள்.

சிந்தனை என்றும், அறிவு வளர்ச்சி என்றும், மனிதரின் உரிமை என்றும் லட்சியம் எனவும் பேசி யும் எழுதியும் அவற்றுக்காகவே வாழ்ந்தும் வரு கிற ஒரு சிலரை, இந்த வீணர்கள் நையாண்டி செய்கிறார்கள். 'லட்சியப் பாதையாவது, ஒற்றையடி நெரிஞ்சிமுள் பாதையாவது! சிந்தனையாவது, சீனியா வரைக் காயாவது! அறிவாவது! மண்ணுவது! பேத் தல். சமூகத்து உரிமையாம்! சாட்டையாம்! சமூ கத்துக்குச் செருப்படி கொடுப்போம்' என்று காலித் தனமாக, மடத்தனமாக உளறிக் கொட்டி, பேத்தி யும் புலம்பியும் ஆத்மதிருப்தி கொள்கிறார்கள்.

சம்பிரதாயப் பொந்துகளிலே பதுங்கிக் கிடந்து பழங் குப்பைகளிலே புரண்டு, அந்தகாரத்திலே கொக்கரிக்கும் இவ் வீணர்களுக்கு, வீணர்களின் விருதா இலக்கியங்களுக்கு சாவோலை எழுத வேண்டிய காலம் வந்துவிட்டது. அவர்கள் இலக் கியாசிரியர்கள் என்ற சொல்லுக்கே அருகதையற்ற

வர்கள். ஏன்? இலக்கியம் என்றால் என்ன என்றே உணராத கனவுக்குப் பாடிகள், புகழுக்குப் பாடிகள், காசுக்குப் பாடிகள் அவர்கள்!

உலகிலே உயிர்க்குலம் பெற்றுவரும் அறிவு மலர்ச்சியை உணர விரும்பாது, உணர்ந்தாலும் தமிழிலே அவ்வித மலர்ச்சி புகுத்த உழையாது, பழமைக்கு மெருகு பூசி, மடைமைக்கு வர்ணம் தீட்டி மறுமலர்ச்சி என்று மயங்கும் விழிகண் குருடர் கூட்டம் இன்றைய இலக்கிய உலகிலே பெருகி விட்டது. அவர்கள் முதலில் திருந்தவேண்டும். ஊருக்கு உபதேசிக்கக் கிளம்புவதன் முன்பாக, இலக்கியத்திலேயே 'பாலபாடம்' படிக்க வேண்டிய நிலையிலே தான் இருக்கிறார்கள் பெரும்பாலோர். அவர்களை எண்ணும்போது ஏசுநாதர் சொன்னது போல 'அவர்களுக்கு ஐயோ! என்ன செய்கிறோம் என்பதையே அவர்கள் அறியவில்லை!' என்று அனுதாபம் கூறவேண்டியது அவசியமாகிறது.

---

# 3. திரையைக் கிழி!

*ஏறி நின்று பாரடா எங்கும்*
*எங்கும் பாரடா இப்புவி மக்களை;*
*பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!*
*'என்குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய*
*மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!*
*அறிவை விரிவுசெய்! அகண்டமாக்கு!*
*விசாலப் பார்வையால் விழுங்குமக்களை!*
*அணைந்துகொள்! உன்னைச் சங்கமமாக்கு!*
*... ... ... ... ...*
*நள்ள மனிதர்க்கும் கூறடா தோழனே!*

*(பாரதிதாசன்)*

இன்றைய இலக்கிய உலகிலே தேக்கம் நிலவுகிறது என்பதை எல்லோரும் உணர்கிறார்கள். இலக்கிய வளர்ச்சி மேல் நாடுகளில் உள்ளது போல் தீவிர கதியில் முன்னேறவில்லை என்று விமசகர்கள் கூறுகிறார்கள்.

அதே வேளையிலே எழுத்தாளர்களின் எண்ணிக்கை கூடி வருகிறது. பத்திரிகை படிக்கிறவர்கள் எல்லோரும் எழுத்தாளர்களாகிவிடத் தவிக்கிறார்கள். எழுதிய எல்லாம் — குப்பை கூளமெல்லாம்-அச்சிலே வரவேணும் என அவாவுகின்றனர். பத்திரிகாசிரியர்களைப் பழி வாங்கவும், வாசகர்களை வதை புரியவும், தங்கள் எழுத்தை அச்சிலே காணும் ஆசையாலும் 'மாதம் ஒரு புத்தக'ங்களும் பத்திரிகைகளும் உற்பத்தி பண்ணிக் குவிக்கிறார்கள்.

ரொம்ப சந்தோஷம். போற்றவேண்டியதே. வரவேற்கத் தக்க வளர்ச்சியும் கூட. ஆனால், இவற்றிலே பெரும்பாலானவை காகிதத்துக்கும் அச்சு மைக்கும் உழைப்போர் நேரத்திற்கும் பிடித்த கேடு தான்! களவாணித்தனமும், மாரீசமும், கூறியது கூறல், புலம்பியது புலம்பல் போன்றனவும், சிறுபிள்ளைகள் தகரடப்பாவிலே கற்களைப் போட்டு ஓசை எழுப்பி மகிழ்கிற வித்தைகளும் தான் மலிந்துள்ளன. காதல் எனும் பெயரால் காமத்துக்கும் கவிதையெனும் பெயரால் பேத்தலுக்கும் குறைவில்லை!

புத்தகங்கள் வந்து குவிகின்றன. சாரமற்ற கதைகளும் உயிரற்ற கட்டுரைத் தொகுப்புகளும் போகப் பிற அயல்நாட்டு நூல்களைத் தழுவி எழுதிய அரசியல் நூல்களும் நாட்டுச் சரிதைகளும் மொழிபெயர்ப்பு நாவல்களும் தான். இப்போது சொந்தத் திறமையைக் காட்ட சிலர் நாவல் எழுத முற்பட்டிருக்கிறார்கள். முழுவெற்றி பெற்றவர்கள் அதிகமில்லை.

இத்தகைய தேக்கநிலை ஏற்பட்டிருப்பதேன் இலக்கியத்திலே? இதே கேள்வியை பலர் என்னிடம் கேட்கிறார்கள்.

இலக்கிய நண்பர் ஒருவர் எனக்கு எழுதியுள்ள கடிதம் ஒன்றை இதோ தருகிறேன் —

'இலக்கியத்தில் தேக்கம் ஏன் என்று யோசித்துப் பார்த்தேன். எனக்குத் தோன்றியது.

1. தப்பி ஓடுங் கொள்கை (Escapism) — வாழ்வின் பிரச்னைகளை, சமூகத்தின் கோரங்களை, அதன் அடிப்படைக் காரணங்களை, அவற்றுக்குரிய

பரிகாரங்களை இலக்கியத்திலே அலசாமல உமாரா காயம் மனப்பான்மையுடன் எழுத்தாளர்கள் வாழ்வது. வெயிலுக் கேற்ற நிழல். வீசும் தென்றல் காற்று, கையில் கவிதை நூல், கலசம் நிறைய மது, கலந்து சுகிக்கக் கன்னி — இந்தப் போக்கில் இலக்கியத்தை கையாள்வது. கலசத்திலும் கடவுளைக் காண்கிறோம் என்றும், ஆத்மானு பூதி என்றும் பிதற்றி ஓய்ந்த மண்டபங்களில் பங்கியடிக்கும் பண்டாரங்கள் மாதிரி, வாழ்வுடனும் துன்பத்துடனும், வறுமையுடனும் மூடத்தனத்துடனும் போராட சக்தியின்றி, மக்களை சோம்பேறிகளாக்கும் எழுத்துக்களை வரைவது. இந்தக் கோளாறான வாழ்வுத் தத்துவத்தை நாம் தகர்க்க வேண்டும். இதற்குவழி பொதுஜனக் கல்வி தான்.

ஆனால் இன்றைய இலக்கிய பிரமாக்களில் பலர் 'Mass education is a fallacy' — பொதுஜனக் கல்வி என்பது அர்த்தமற்ற பேச்சு - என்று கூறத் துணிகிறார்கள். இது விந்தையாக ஒலிக்கிறது. ஒப்புக்கொள்ள முடியாதது. பொதுஜனக்கல்வி ஒருநாளும் சாத்தியமாகாது என்பது தவறு, இந்தியாவின் கதி மோட்சம் ஒவ்வொரு மனிதனின் தளர்ச்சியையும் பொறுத்துத்தான் இருக்கிறது.

2. கதாசிரியரின் தோல்வி மனப்பான்மை, முன்னேற்றத்திலும், பொதுஜன வளர்ச்சியிலும் நம்பிக்கை குறைவு. கிருபானந்தவாரி பிரசங்கம் மூலமாக எவ்வளவோ பேர்களைத் திருப்புகழ் படிக்கும்படி தூண்டமுடிகிறது என்றால், நமது பத்திரிகைகள் முயன்றால் எவ்வளவு அறிவைப் பரப்ப முடியாது? எல்லாம் திடசித்தத்தைப் பொறுத்தது.

3. எழுத்தாளர்கள் சுற்றுச் சார்புகளுக்கு அடிமையாயிருப்பது. இதனால் பல குழப்பம் திகைப்பு. தத்தளிப்பு ஏற்படுகிறது. ஆகவே கலையிலும் அவை தான் பிரதிபலிக்கின்றன,

4. 'தூண்டுதல் சக்தி'யில் (Stimulants) அர்த்தமற்ற நம்பிக்கை, எழுத எழுச்சி வேண்டும்...... கலைஞர்களுக்கு பசி வேண்டும் ..பட்டினி வேண்டும் அவை தான் கிரியா சக்திகள் (Driving Forces) அவை இருந்தால் தான் எழுத முடியும். இல்லாவிட்டால் எழுத்தாளன் சோம்பேறியாகிவிடுவான் என்று நினைப்பது.

என்ன வேடிக்கை! உலகத்திலே பசியைப் போக்க வேண்டும் என்று எல்லோரும் கூக்குர விடும் போது, ஒரு சிலர் ஆக்கவேலைக்கு அவசியமானது பசி என்று கூறுவது வேடிக்கையாக இல்லையா?'

நண்பர் சரியாகச் சிந்தித்திருக்கிறார் என்பதைப் பாராட்ட வேண்டும்.

நான் சொல்கிறேன் —

இன்றைய இலக்கியத் தேக்கத்திற்கு முக்கிய காரணம் இன்றைய எழுத்தாளர்களின் கோளாறான போக்குதான். அவர்கள் மனோபாவத்தை இரண்டு விதமாகப் பகுத்துவிடலாம்.

1. தாங்கள்—இலக்கிய பிரமாக்கள்—உயர்ந்த ஜந்துக்கள். தங்களுக்கு நிகர் தாங்களே தான். தாங்கள் அறியவேண்டியது ஒன்றுமே கிடையாது. சொல்லவேண்டியதை எங்கள் இஷ்டம் போல் தான் எழுதுவோம். படித்தால் படிக்கட்டும்; படியா

விடில் ஒழியட்டும். நாங்கள் எங்களுக்காகத் தான் எழுதுகிறேமே தவிர. மற்றவர்களுக்காக அல்ல. குயில் தனது இஷ்டம் போல் தான் பாடும். மழையே பெய் என்று பிறர் கூவினல் மேகம் மழையைப் பொழிகிறதா? அது இஷ்டப்பட்ட போது தானே வர்ஷிக்கிறது! நாங்களும் அப்படித்தான்! — இவ் விதம் என்னதோ 'கடுகு உள்ளம்' பெற்றுவிட்ட வர்கள் பாதிப்பேர்.

2. லட்சியமாவது எழவாவது! கொள்கையாவது சீர்திருத்தமாவது! உலகம் உருப்படுவது ஏது! அவரவர் பாட்டைப் பார்த்துக்கொண்டு போவது தான் செய்யக்கூடிய காரியம் என்று தங்கள் நிலை யிலே திருப்தி கொண்டு விடுகிறவர்கள் பலர்,

இப்படி தங்களை உயர்ந்த ஜந்துக்களாகப் பாவிக்கிறவர்களும், தங்களால் ஒன்றும் இயலாது என்று தங்களையே தாழ்த்திக் கொள்பவர்களும் உருப்படியாக எதைச் சாதித்துவிடமுடியும்? அவர் களது அகந்தை மனேபாவமும், தோல்வி மனேபாவ மும் எழுத்திலே தேங்கிக் கிடக்கிறது.

கொள்கையற்றவர்களாய், லட்சியமற்றவர்க ளாய் தாங்கள் வாழ்வதுடன் நில்லாது இலக்கியத்தை யே பாழடித்து, சமுதாய வளர்ச்சிக்கு தடை போட்டு வருகிருர்கள். இத்தகையவர்களை உண்மையான இலக்கியாசிரியர்கள் என்று எப்படி ஏற்கமுடியும்?

இலக்கியம் என்பது என்ன? வாழ்க்கையை பிரதி பலிப்பது. வாழ்வின் தன்மைகளையும் தவறுகளை யும் கண்டு. ஆராய்ந்து, சிந்தித்து, நன்மைகளைப் போற்றி ஊழல்களை ஒழித்து, திருந்தும்படி தூண்டு

வது. மற்றவர்களையும் சிந்திக்கச் செய்வதன் மூலம் வாழவழிகண்டு, மனித உரிமைகளைப்பெற்று இன்ப வாழ்வை நிர்மாணிக்க முயல்வது. சகிப்புத் தன்மையும் போராடும் சக்தியும், தன்னம்பிக்கையும், உயிர் வாழத் தெம்பும் ஊட்டுகிற வாழ்க்கை வழிகளைக் கூறுவது. அல்லது, திட்டமிடத் தூண்டுவது.

ஒவ்வொருவனும் மனிதனே. மனிதரிடையே மனிதனாக வாழ எல்லோருக்கும் உரிமை உண்டு. அப்படி வாழ வேண்டும். நாம் வாழத் தான் பிறந்தோம். வாழ்வின் இழிதகைமைகளை ஒழிப்போம். வெல்வோம். வாழ்வோம் — இதற்கு உணர்வு ஊட்டி, உற்சாகம் அளித்து, செயலுக்குத் தூண்டுவது இலக்கியம். அது கவிதை, கதை, கட்டுரை, நாடகம், நாவல் முதலிய எந்த உருவில் இருந்தால் என்ன?

இந்த ஒளி மங்கிவிட்டது. உயிர்க்கனல் அவிந்து கிடக்கிறது. வெறும் கூடுகளும், பொம்மை உருவங்களும், பிரேதங்களும் இலக்கியம் என்று பிரமாதப்படுத்தப்படுகின்றன. இவற்றை சிருஷ்டிப்பவர்கள் பரஸ்பரம் புகழ்ந்து கொண்டும் வசை பாடியும் திரிகிறார்கள், ஏதோ அற்புதங்களைச் சாதித்து விட்ட அபூர்வப் பிறவிகள் போல.

அவர்கள் கற்க வேண்டியது எவ்வளவோ. சாதிக்க வேண்டியவை அளவில.

முதலில், அவர்கள் தங்களைச் சுற்றிப் பின்னியுள்ள பொம்மை வலையை, போலி படாடோபத் திரையை கிழித்தெறிய வேண்டும். தாங்களும் தொழிலாளர்களே என்று உணர்ந்து, சமுதாய

மக்களோடு மக்களாக வாழ்ந்து உலகத்தை, வாழ்வை விழிப்புடன் கவனித்து அனுபவம் பெறவேண்டும். சிந்திக்க வேண்டும்.

புதிதாக எழுத ஆரம்பிக்கிறவர்கள் கூட இவற்றை உணர்வதில்லை. தாங்கள் எல்லாம் அறிந்துவிட்டதாக அகந்தை கொள்கிறார்களே தவிர, விழிப்புற்ற உள்ளத்துடன் வாழ்க்கைப் பிரச்னைகளை அலச முன்வருவதில்லை. சிந்தனை, புதுமை, துணிவு முதலியவற்றுக்கும் இவர்களுக்கும் ரொம்ப தூரம்.

இவர்கள் கையில் சிக்கித் திணறும் இலக்கியம் உருப்படும் என்று எதிர்பார்ப்பது பேதமை யல்லவா!

---

# 4. இவை தேவை

வீழ்ச்சியுறும் தமிழகத்தில் எழுச்சி வேண்டும்!
விசை ஒடிந்த தேகத்தில் வன்மை வேண்டும்!
சூழ்ச்சிதனை வஞ்சகத்தைப் பொறாமை தன்னைத்
தொகையாக எதிர்நிறுத்தித் தூள்தூளாக்கும்
காழ்ச்சிந்தை மறச்செயல்கள் மிகவும் வேண்டும்!
கடல் போலச் செந்தமிழைப் பெருக்க வேண்டும்!
(பாரதிதாசன்)

நாட்டுக்குத் தேவை—

ஏட்டைக் கெடுக்கும் கதைகளல்ல. உள்ளத்தைக் கள்ளமாக்கும் கற்பனைகளல்ல. ஆண் பெண் காம நாடகமல்ல. மிருகவெறியரின் கள்ள நட்பை காதல் என வர்ணம் பூசி, உளச் சித்திரம் எனக் கூறும் சொல் ஜாலங்கள் அல்ல.

காகிதத்தைக் கறுப்பாக்கும் காளான்கள் தேவையில்லை. அறிவைக் களங்கமாக்கும் அளப்புகள் தேவையில்லை, சோர்வு நீங்காத சொர்க்கக் கனவுகள் தேவையில்லை. பித்தலாட்டங்கள் தேவையில்லை.

கற்றோர் ஒரு சிலர், சிலரில் சிலரே எழுத முன் வந்திருக்கிறார்கள், மற்றவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக குமாஸ்தா வேலையோ, ஆபீஸ் உத்தியோகமோ எதுவோ பார்த்து, நாட்கள்பின் நாட்கள் கழியும் என்று வாழ்க்கை நடத்துகின்றனர்.

மண்ணோடு மண்ணைக் கிடப்போர் ஆயிரமாயிரம் மக்கள். உயிர் வாழ வேண்டும் என்ற ஆசையால், இதர பயத்தைப் போக்குவதற்காக, மூடக்

கொள்கைகள், மத சம்பிரதாயங்கள் போன்றவற்றி லே அர்த்தமற்ற, தெளிவற்ற நம்பிக்கை கொண்டு கிடக்கிறார்கள் பெரும்பாலோர்.

வாழ்கை என்பது என்ன, வாழ்வின் தன்மை என்ன, இன்ப வாழ்வை எப்படிப் பெறலாம் என் பன போன்ற முக்கிய விஷயங்களை அறியமுடியாது 'இந்திரனார் உலகிலே இன்பம் இருக்குதென்பார்' என்று கருதி அல்லலுற்று கவலை வளர்த்து வாழ்வை மண்ணாக்குவோர் எண்ணற்றவர்கள்.

உரிமையற்று உடலோய உழைத்துச் செத்துக் கொண்டிருப்பவர்கள் கணக்கற்றோர். சுரண்ட லால் வஞ்சகத்தால். சூழ்ச்சியால் வாழ்வோர் கணக் கிலர்.

சிந்தனையற்று, சிந்திக்கத் தெரியாது பொட்டுப் பூச்சிகளாய் வாழ்ந்து மடியும் கூட்டம் பெரிது. கவலையற்ற, நோயற்ற, சுகவாழ்வை இங்கேயே அனுபவிக்கலாம் என்பதை உணரமுடியாது மிரு கங்கள் போல் வாழ்வோர் எவ்வளவோ!

சமூகத்திலே அறியாமை பேய்நடம் புரிகிறது. அறியாமை முதலாம் இழிதகமைகள் அனைத்தையும் வேரறுக்க வேண்டும். அதற்கு உரிய கருவி இலக் கியம் தான்.

மக்களைச் சிந்திக்கவைப்பது, சிரிக்கச் செய்வது, சீர்திருந்தத் தூண்டுவது; அவர்கள் கவலையை, அறியாமையை நீக்குவது வாழ்க்கையிலே பற்றுதல் ஏற்படுத்தவல்லது. இன்ப வாழ்வு காணத்தூண்டு வது. மனிதராக வாழவைப்பது — எவ்வளவோ வலிமை பெற்றது இலக்கியம்.

இலக்கியம் சக்தி வாய்ந்தது. நாகரிகத்தின் ஜீவன் அது. கலாசாரத்தின் உயிர்ப்பு. மனித உயர்வின் சின்னம் அது. உயர்வுக்கு வழிகாட்டும் பாதை அது. இலக்கியம் மொழியின் மூச்சு. உயிர்களின் சக்தி. ஒளி அது. வாழ்க்கைக்கு அத்தியாவசியமான 'மந்திரம்' அது.

வாள் கொண்டு பகைமைக் களைகளை அறுத்தெறியலாம். துஷ்டப்பிராணிகளை ஒழிக்கலாம். தற்கொலையும் செய்து கொள்ளலாம்!

இலக்கியம் ஒரு வாள், வலிவுள்ள கருவி. அது அமுதம். அதே நச்சாகவும் மாறும்.

வாள் பயனுள்ள ஆயுதமாவதும் தற்கொலைக் கருவியாவதும் பற்றியுள்ளவன் கைவன்மையை, மனோவலிமையைப் பொறுத்தது.

இலக்கியம் அமுதமாவதும் நஞ்சாக மாறுவதும் பேனாப் பிடிக்கிறவர்களின் மனோ பலத்தை, நம்பிக்கையை, திறமையைப் பொறுத்தது.

இன்றைய எழுத்தாளர்களில் பெரும்பாலோர் அமுதத்தை நச்சாக மாற்றும் திருப்பணியில் தான் ஈடுபட்டிருக்கிறார்கள். முழு நஞ்சு தயாரிக்கத் திறனற்றோர், அமுதத்தின் புனிதத்தைக் கெடுத்துக் கோளாறுபடுத்தும் 'புண்ணிய'வேலையை யாவது செய்து வருகிறார்கள்.

இலக்கியத்தின் மனிதப்பண்பை மறந்து விடுகிறார்கள். அல்லது ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள், அதே வேளையில் இலக்கியம் தெய்வீகமானது என்று சொல்லி ஒருசிலரின் தனி அறைகளுக்குள்ளே பதுக்கி விட முன்வந்திருக்கிறார்கள்.

அறிவு என்ன இவர்களின் வளர்ப்புப்பண்ணையா என்று கேட்கிறேன், இலக்கியம் இவர்களது அப்பன் வீட்டுச் சொத்து என்று பதுக்கி வைத்து, மற்றவர்களை முட்டாள்கள் என்று ஒதுக்கிவிட?

தமிழ் என்ன இவர்களது சொந்த அத்தை மொழியோ, இலக்கியத்தை தங்கள் காதலியாகக் கருதி கன்னித்தனமும் கற்புத் தன்மையும் அழியாமல் பாதுகாக்கிறோம் என்று அறியாமை அகந்தை கொள்வதற்கு, எனக் கேட்கிறேன்.

தமிழ் தமிழரின் உயிர். நாட்டு மக்களின் மூச்சு. ஆகவே, மொழியின் ஜீவனான இலக்கியம் மக்களின் சொத்து; மக்களின் சொத்தை, உரிமையை சுரண்டுகிறவன், பறித்துப் பதுக்கிவிடத் தவிப்பவன் சுயநலத்துக்குப் பயன்படுத்த எண்ணுகிற எவனுமே துரோகி தான். மக்களின் துரோகி அவன். மொழியின் காலகாலன் அவன், நாட்டுப் பண்பாட்டைப் பாழ்படுத்தும் கறையான் அவன். உயிர்க்குலத்துக்கு இழிவு தேடும் புல்லுருவி அவன்.

உண்மை எழுத்தாளன் இப்படி இரான். அறிவு பெறவேண்டியது மக்களின் கடமை, சிறப்பாக உயிர்வாழ வேண்டியது அவர்கள் உரிமை. அதற்கு வழிகாணச் சிந்தனைசெய்ய வேண்டியது அவர்கள் பொறுப்பு. அதற்கு அவர்களைத் தூண்டுவது இலக்கியத்தின் வேலை. தோழனாய், வழிகாட்டியாய், சமுதாயத்தின் முன்னோடியாக வாழவேண்டியவன் இலக்கியாசிரியன். அவன் லட்சியவாதி.

எவ்விதமான கொள்கையோ, லட்சியமோ அற்று எழுதுகிறவன், 'வௌவால்.' அவன் இலக்கியாசிரியனெனப் பெயர் பெற லாயக்கற்றவன். மனித குலத்

துக்கு மனிதன் என்ற முறையில் செய்ய வேண்டிய கடமையைப் புறக்கணித்த துரோகி அவன்.

இன்று மக்கட்தலம் முன்னேற்றப் பாதையிலே தளர் நடை போட்டுக்கொண்டிருக்கிறது. தமிழின் ஆர்வமாக முன்னேறத் தவித்து நிற்கிறது. தலைநிமிர்ந்து முன்செல்ல அவர்களுக்கு உற்சாகம் தேவை. அவர்களுக்கு தன்னம்பிக்கை 'இன்ஜெக்‌ஷன்' தேவை. வாழப்பிறந்தோம் என்று ஊக்குவிக்க வேண்டியது அவசியம், இவற்றைச் செய்ய வேண்டியவன் இலக்கியாசிரியன்.

வாழ்க்கைப் பாதையிலே இன்னல்கள் மண்டிக் கிடக்கின்றன. சிறுமைகள் பெருத்துவிட்டன. சூழ்ச்சிகள் பதுங்கியுள்ளன. அறியாமை கனத்துக் கவிந்திருக்கிறது. அர்த்தமற்ற பயமும் மூடநம்பிக்கைகளும் மல்கியுள்ளன. இவற்றை நீக்கி அறிவொளி பரப்ப வேண்டியது இலக்கியம், சிந்தனை விருந்து அளிக்க வேண்டியவன் இலக்கியாசிரியன்.

எழுத்தாளர்களாகிவிடுவது யாவர்க்கும் எளிது. எழுத்துத் திறமையை இலக்கியமாக்க பண்பு பெற வேண்டும், குன்றாத ஆர்வமும், குறையாத தன்னம்பிக்கையும், தளராத ஊக்கமும், சலியாத மனோதிடமும்—எல்லாவற்றுக்கும் மேலாக—சிறந்த லட்சியமும் வேண்டும், இலக்கியாசிரியனுக்கு. விழிப்புற்ற சமுதாயத்தின் எக்காளம் அவன் உரிமை உணர்வு பெறுகின்ற மக்களின் இதயஒலி அவன். மக்களை செயலுக்குத் தூண்டுகின்ற வீர முரசும் அவனே. உரிமைக் குரலை இடியாக, மக்களின் உணர்ச்சியை எரிமலை அக்னியாக மாற்ற வல்லவன் உண்மையான இலக்கியாசிரியன். அவர்களிடையே அன்பும் அமைதியும் ஆனந்தமும் பரப்புகிறவன் அவன்.

மொழி அவன் துணை. சொல்லுக்கு உயிர் கொடுப்பது அவன் திறமை. இலக்கியம் அவன் கைக் கருவி. இனிய கீதமிசைக்கும் வேய்ங்குழலாக இலங்கும், அதுவே, சுட்டெறிக்கும் பாணமாகவும், சொடுக்கியடிக்கின்ற சாட்டையாகவும், குத்துகின்ற ஈட்டியாகவும், அரித்து அரித்து குறைகள் மீது கசப்பு ஏற்படுத்தும் 'ஆஸிட்' ஆகவும் மாறும்.

'வாளினும் வலியது பேனா' என்றது உண்மை இலக்கியாசிரியனின் திறமையை உணர்ந்த பேச்சு. பேனா முனையை, மெதுவாக வருடி இன்பம் கிளுகிளுக்கச் செய்கின்ற சிறகு எனக் கருதும் படியாகவோ, குத்தித் தைத்து ரணமாக்கும் ஈட்டிமுனை என எண்ணும்படியாகவோ இயக்க வல்லவன் இலக்கியாசிரியன். சொல்லின் செல்வன் அவன். சிந்திக்கத் தெரிந்தவன் அவன். சிந்திக்கச் செய்பவன் அவன்.

இத்தகைய இலக்கிய ஆசிரியர்கள் இன்று அதிகம் தேவை.

# 5. இதய ஒலி

வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும்
தோளெங்கள் வெற்றித் தோள்கள்!
கங்கையைப் போல் காவிரிபோல் கருத்துக்கள்
ஊறுமுள்ளம் எங்கள் உள்ளம்!
வெங்தநதி தனிற்குழ்ந்து வீரஞ்செய்கின்ற
தமிழ் எங்கள் மூச்சாம்! (பாரதிதாசன்)

இலக்கியம் எல்லோருக்கும் பொது என்று கூறுகிற சிலரை பழமை விரும்பிகள் பரிகசிக்கிறார்கள்.

மக்களின் ஏழ்மையை, சிறுமைகளை, துயரை மனித சமுதாயத்திலே பின்னிக் கிடக்கிற சூழ்ச்சிகளை, அனைத்தையுமே இலக்கியத்திலே உணர்ச்சிகரமாகப் பதித்து படிப்போரின் அகக்கண்களை விழிப்புறச் செய்து, அவர்களைச் சிந்திக்கும்படி தூண்ட வேணும் என்று சொல்கிறவர்களை பித்தர்கள் எனச் சிரிக்கிறார்கள் பேதைகள்!

வாழ்வின் நிர்வாணத் தன்மையை அம்பலமாக்கி அதன் கோரங்களைக்கண்டு கண்கூசும்படி, அவற்றை வெறுத்து சீருறுத்தும் உணர்வு பெறும்படி மக்களைத் தூண்ட வேண்டும் இலக்கியம் என்று சொல்லும் போது இலக்கிய சனாதனிகள் சீறுகிறார்கள்.

இலக்கிய மறுமலர்ச்சி தேவை என்று சொல்லுபவர்களைக் கண்டு கரித்துக்கொட்டுகிறார்கள் பலர். மறுமலர்ச்சி என்று சொல்லிக்கொண்டு மடமையைப் போற்றுகிறார்கள் கனவுக்குத் தாளம் போட்டு புராணத்தைக் கட்டியழ விரும்புகிற பிற்போக்குக் கும்பல்கள்.

சொல்லவேண்டிய உண்மைகளை ஆணித்தரமாகச் சொல்லுங்கள். உணர்ச்சியுடன் அழுத்தமாக எடுத்து எழுதுங்கள். சொல்லுக்கு உயிர் கொடுங்கள். இவை தான் முக்கியம். இவற்றுக்குக் கட்டுப்பாடுகளும் இலக்கண விதிகளும் பண்டிதச் சட்டங்களும் தடையாக இருந்தால், அவற்றைத் தகர்த்தெறியுங்கள், மனிதருக்காகத்தான் சட்டங்களும் திட்டங்களுமே தவிர, சட்டங்களுக்காக மனிதரல்ல அவசியம் ஏற்படும் போது சட்டங்களைத் தகருங்கள் — இப்படிச் சொல்லும் போது பெருங் கல்விப் பண்டிதர்கள் குமுறுகிறார்கள். கோபிக்கிறார்கள்!

ஆனால் காலம் இவர்களுக்காகக் காத்திருப்பதில்லை. காலத்துடன் போட்டியிட்டு வளரும் அறிவும், அறிவின் வலிமையான சிந்தனையும், சிந்தனையின் சிறப்பான இலக்கியமும் இவர்கள் அச்சுறுத்தல்களினால் பம்மிவிடப் போவதில்லை!

எழுதுவோம் எனத் துணிந்து விட்டவர்கள். இலக்கியமே உயிர்மூச்சு என்று மதித்துவிட்டவர்கள் 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழ்' என்பதை இதயஒலியாகப் பெற்றுவிட்டவர்கள் பிறரது கோபத்துக்கோ, பொருமைக்கோ, புகழ்ச்சிக்கோ வசைமாரிகளுக்கோ, நட்புக்கோ பகைமைக்கோ அடிபணிந்து விடப்போவதில்லை.

அவர்கள் உள்ளம் ஒலிக்கிறது: 'என் தாய் மொழிக்குப் பழிவந்தால் சகிப்பதுண்டோ? உமை ஒன்று வேண்டுகின்றேன். மாசில்லாத உயர்தமிழை உயிர் என்று போற்றுமின்கள்!'

தமிழ் வளர்ப்போம் என்று சொல்லி தறுதலைத்தனம் செய்யும் கயவர்களைக் காயவே முந்துகிறது

இலக்கியவாதிகளின் பேஞ. தமிழை வளர்ப்பது யார்? தமிழ் தாஞக வளரும். மக்களால் வழங்கு தமிழைத் தனியொரு கும்பல் சொந்தமாக்கி வளர்க்க வேண்டிய அவசியமில்லை. 'மலையிலே பிறந்து தென்னன் மடியிலே தவழ்ந்து, நீரிலே நீந்தி நெருப்பிலே குளித்து' ஜாலங்கள் செய்த ஏட்டுக்கலையை வளர்ப்போம் என்று கூறி நாட்டைக் கெடுப்பவர்கள் மொழி வளர்க்க வகை செய்வோரல்லர் என்று மீண்டும் கூறுகிறேன். மொழியும் இலக்கியமும் கலையும் மக்களின் உரிமை. மக்களுக்காக, நாட்டின் வளர்ச்சிக்காக என்று மீண்டும் குறிப்பிடுகிறேன்.

இவ்விதம் கூறவரும் என்னை பழமை விரும்பிகள் காய்கிருர்கள் என்பதை நான் அறிவேன். வசைபாட வந்தவன் என்று பேசி மகிழ்கிருர்கள் என்பது எனக்குத் தெரியும். வேறு எதுவும் எழுதத்தெரியாத காரணத்தால் சிசுபாலதாசஞக மாறிவிட்டேன் எனப் பித்தர்கள் புலம்புவார்கள்! எனது எழுத்திலே கலையில்லை. இலக்கணமில்லை என்று காசுக்கும் கனவுக்கும் எழுதி கலைவளர்ப்பதாகப் பேசுவோர் கேலி பேசலாம். ஆம். கலை இல்லை தான், அவர்கள் கனவு நோக்குப்படி. ஆமாம். கவிதை இல்லை தான் அவர்களது அடிமை உணர்ச்சி நோக்கிலே. அழகு இல்லை தான், காதலும் அந்தப்புர லீலா விநோதங்களும் எனது எழுத்திலே இல்லவே இல்லை தான், குறுகிய மனேபாவம் பெற்றுவிட்ட இலக்கிய சஞதனிகளின் விழிகண் குருட்டுப் பார்வைப்படி!

ஆஞல், எனக்கு கவலையில்லை. என் எழுத்திலே கருத்து இருக்கிறது. சிந்தனை இருக்கிறது. உண்மை இருக்கிறது. உயிர் இருக்கிறது. புதுமை இருக்

கிறது. இவை இல்லை என்று கூறுவோர் முன் வரட்டும். என் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளத் துணியாவிட்டாலும் எழுத்துக்கு உயிர் இல்லை என்று கூறத்தயங்குகிற — சொல்லின் வலிவைக் கண்டு வியக்கிற — உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசும் 'உத்தமர்கள்' என்ன சொன்னால் எனக்கு என்ன! எனது எழுத்துகள் இலக்கியமே அல்ல என்று கூறிவிட்டால் தான் எனக்கு என்ன நஷ்டம்! பழங்காலச் சங்கப் பலகையின் வாரிசு களோ இவர்கள்! ஆனால் சங்கப் பலகைக்கு இருந்த தாகச் சொல்லப்படும் நேர்மை இவர்களிடம் இல்லை! பளாபளா!

முடியோடு முடி புனைந்து தலையை வெட்டிய ஒட்டக்கூத்தன், எட்டியமட்டும் குறும்பையுடன் காத ருத்த வில்லி, குட்டிக்குட்டிப்பெருமை பெற்ற பாண்டி யன், தன் தலையிலே குத்திப் பரிதபித்த சித்தலைச் சாத்தன் ஆகியோர் அடிச்சுவட்டைப் பின்பற்ற விரும்புகிற 'கீரர்களோ' இவர்கள்! கீரனின் நெஞ் சுத் துணிவும் உண்மையைக் கூறும் ஆற்றலும் இவர்களிடம் இல்லையே!

போகட்டும், போலிப் பெருமை பேசி அகமகிழ் பவர்களின் திருப்தியை நானும் எனது நண்பர்களும் கெடுக்க விரும்பவில்லை ஆனால் 'எதேச்சாதிகாரி களின் காலம் மலையேறிக்கொண்டிருக்கிறது. எதி லும் சரி – இவர்களைப் போன்றவர்களின் ஆதிக்க வெறி. சுரண்டல். உயர்ந்தவர் எனும் சித்தாந்தம் முதலியவற்றை யாரும் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் சாவுமணி அடிக்கப்பட்டு வருகிறது, சமாதிக்குழி தோண்டியாகிறது என்பதற்கு முன்னறிவிப்பு

போல!' என்று தான் எச்சரிக்க விரும்புகிறோம் — எழுத்தாளச் சகோதரர்கள் என்ற முறையிலே!

'மனம் மாறுங்கள்! அல்லது மாண்டு போங்கள்!' என்று தான் விழிப்புற்ற சமுதாயம் கூறத் துடிக்கிறது,

# 6. எழுதுங்கள்!

*கலையை வளர்! தொழில் மேவிடு!*
*கவிதைபுனை தமிழா!*
*நீதி நூல் விளை! உயிர் நூல் உரை!*
*இசைநூல் மிக வரைவாய்!* (பாரதிதாசன்)

இலக்கியத்திலே ஜனநாயகமா என அங்கலாய்க்கிறார்கள், தாம் தான் எழுதப் பிறந்தவர்கள் என எண்ணுகிற ஒரு சிலர், எல்லோரும் எதைப்பற்றியும் எழுதலாம்; எழுத முடியும்; எழுதும் பக்குவமும் பண்பும் பெறலாம், எழுத வேண்டும் என்ற ஆர்வம் கொண்டு உழைத்தால்... என நான் சொல்கிறேன்.

எழுத முடியாது எல்லோரும், இலக்கிய ஜனநாயகம் வெற்றி பெறாது, இலக்கிய சர்வ வியாபகம் என்பது சரியல்ல என்று கூச்சல் போடுகிறவர்களை வீணர்கள் என எண்ணுங்கள்.

எழுத வேண்டும் என்ற ஆர்வம் வெறியாகப் பற்ற, எழுத முடியும் என்ற நம்பிக்கை அழுத்தமாகப் பதிய, எழுதி எழுதிப் பண்பு பெற்றுவிடுகிற யாரும் எழுத்தாளனாகி விட முடியும். படித்து, சிந்தித்து, அனுபவத்தால் உணர்ந்து, தான் சொல்ல வேண்டிய கருத்துகளைத் தெளிவாக எழுதுகிற தன்மையை யாரும் பெறமுடியும்.

ஒருசிலர் தான் சிறுகதைகளும் காவியமும் பிறவும் சிருஷ்டிக்க முடியும் என்று சொல்கிறவர்கள் சொல்லிக்கொண்டே கிடக்கட்டும், தமிழன்

பர்களே, நீங்கள் எழுதுங்கள். சிந்தித்து கலையை இலக்கியத்தை வளப்படுத்த முன்வாருங்கள்.

பழமைக்கு, இருள் எண்ணங்களுக்கு, மடக் கருத்துகளுக்கு, மதக் கற்பனைகளுக்கு, இலக்கியப் புல்லுருவித்தனத்துக்கு சீட்டுக்கிழியுங்கள்.

சிறுமை காணும் போது, சிறுமைகளை வஞ்சகத்தை, பொறாமையை — மனிதப்பண்பை மாய்க்க வல்ல அனைத்தையும் — வேரறுக்க வல்ல ஈட்டி முனைகளாக்குக எழுதுகின்ற பேனாக்களை.

நிலவையும் காட்சியையும் நீராமின்னுளையும் பற்றி மலைமலையாகக் கலைநூல்கள் எழுதிக் குவித்து விட்டார்கள். அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள், கண்களைக் கண்கள் கவ்வ வெடித்தது காதல் என்று கூறி புராணம் பாடும் ஏடுகள் எவ்வளவோ எழுதிக்கிழித்துவிட்டார்கள். போதும் அவை. தம்பி, உலகைக் கவனி.

உலக இலக்கியம் எவ்வளவு வளர்ந்துள்ளது என்பதை எண்ணிப் பார். நமது அருமைத் தமிழ் மொழி பழங்குட்டையாய் தேக்கமுற்றுக் கிடப்பதைத் தான் விரும்புகிறாயா?

புதுயுகத்தின் பிரதிநிதியாகிய நீ அப்படி அவாவுற மாட்டாய். அது எனக்குத் தெரியும்.

எதைப் பற்றி எழுதுவது என்று மருளாதே. ஏழைகளோடு ஏழைகளாய், உழைப்போரோடு உழைப்போராய் பழகும் நீ அவர்கள் துயரை, அவர்கள் உரிமை மூச்சை, அவர்கள் எண்ணங்களை, அவர்கள் வாழ்க்கையை எழுத்திலே சித்திரிக்க முடியும்.

சமுதாயத்திலே பெரும்பாலோர் அவதியுறுவதை யும் ஒருசிலர் உண்டு கொழுத்து மாடி வீட்டிலே சுகபோகபாக்கியங்களுடன் மெத்தையில் சோம்பேறி களாய் புரளுவதையும் நீ காண்கிறாய். முன்னவர் சோக வாழ்வைப் பற்றியும், பின்னவரின் டாம்பீ கத்தை, சுரண்டலைப் பற்றியும் எழுது.

போலிக் கருத்து பொசுக்கும் சொல் அனல் எறியும் கருவியாக்கு உன் பேனாவை. சிரித்துச் சிரித்து சமுதாய ஊழல்களை, மனிதரின் சிறுமைகளைச் சுட்டெரிக்கவல்ல குத்துகிற நையாண்டிச் சொற் களைத் தொடுக்கும் பாணமாக்கு உனது பேனாவை.

உணர்ச்சி நிறைந்த, அழகுள்ள, புதுமைக் கருத்துகள் மின்னுகிற கவிதைகள் எழுது. கவிஞ ரின் எண்ணங்களை, உனது அனுபவங்களை, உன் இதயத் துடிப்புகளை எழுது.

கதைகளும் நாடகங்களும் நாவல்களும் எழுது வது மட்டும் போதாது.

உளப்பரிசோதனை நூல்கள் வேண்டும். உலக வளர்ச்சி சரிதை வேண்டும். சூன்யத்திலே அண் டங்கள் பிறந்த கதை, அக்கினிப் பிழம்பு கெட்டித்து உலகமான கதை, உயிர் பிறந்த கதை, சிருஷ்டி சக்தி ராக்ஷஸ உயிர்களில் ஆரம்பித்து உயிர்களை வைத் துப் பரிசோதனை செய்து பல இனங்களை வகுத்து மனிதரை உண்டாக்கிய கதை.—எழுதப்பட வேண் டும். இவற்றால் அடிபட்டுப் போகும் கடவுள் தத்து வத்தால் வந்த வினை, மதங்களின் பெயரால் விளை யும் அநாகரிகச் செயல்கள், மதத்தின் பெயரால் மனிதரை மடையர்களாக்குவோரின் வண்டவாளங் கள் இவற்றைப் பற்றி எழுது ஏராளமாக. எழுது

வானமண்டலங்களைப்பற்றி, மிருகங்களைப்பற்றி தாவர இனங்களைப் பற்றி, குழந்தைகளைப் பற்றி, மனோதத்துவம் பற்றி, விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சிகளை எழுது. இவற்றை ஆராய்ந்தவர்கள் வரலாறுகளை எழுது.

வருங்காலம் எப்படி இருக்கவேண்டும் என்று எண்ணிப் பார், மனிதர் எப்படி வாழ்கிறார்கள், அவர்கள் வாழ்க்கைப் பாதையின் மேடுகள் என்னென்ன — அவற்றின் காரணம் என்ன என்பனவற்றை மனோதத்துவ ரீதியாக ஆராய்ந்து எழுது,

வாழ்க்கையை, மனோதத்துவத்தைப் பாதித்து அதன் மூலம் சமூகத்தையும் உயிர்க்குலத்தையும் பாதிக்கிற செக்ஸ் விஷயங்களைப் பற்றி விஞ்ஞான ரீதியாகச் செய்யப் பெறுகிற ஆராய்ச்சிகளை எழுது;

ஆராய்ந்து, கண்டு கேட்டு மனோதத்துவ ரீதி, யாக எழுது.

கட்டிலடங்காத கவிதைகள் எழுது. தூங்குகிறவர்களைத் தட்டி எழுப்பும்படியாக உணர்ச்சி கொடுக்கும் பாடல்கள் எழுது.

எழுதவா விஷயமில்லை!

எழுத வேண்டிய விஷயங்களை – எப்படி எப்படி எழுதுவது என்று தெரிந்துகொண்டு — எழுதப் புகுந்து உண்மையான இலக்கியத்தை வரையமுயலும் போது, எழுத விஷயங்களுக்கு பஞ்சமில்லை. எழுதத் தான் நேரமில்லை; ஓய்வு போதாது என்று உணர்வாய்.

சோர்வுறாதே. உள்ளத்தில் உறுதிகொள். உன் சிந்தனைகளில் மின்னலின் சக்தி மிளிரட்டும். உனது இதயத்தில் மின்னலின் வஜ்ரசக்தி மின்னட்டும்.

எழுது. உண்மையான இலக்கியங்களை எழுது. இலக்கியத்தின் பல துறைகளையும் கையாண்டு உனது எண்ணங்களை எங்கும் பரப்பு,

'வருங்காலம் நம்முடையது' என்று சொல்லித் தூங்கி வழிய வேண்டாம். இளந்தமிழ்த் தோழர்களே! வருங்காலமும் நம்முடையது தான். இந்த நிகழ்காலமும் நம்முடையது தான். நமக்கு உரிய ஸ்தானத்தை நாம் தான் கைப்பற்றியாக வேண்டும். எழுதுங்கள் சக்தி பெற்று. உண்மைகளைச் சொல்லத் தயங்கவேண்டாம். பேனா முனை ஈட்டி முனையாகவும் மாறமுடியும் என்று குத்திக் காட்டத் தயங்க வேண்டாம், சமயம் வரும் போது.

நாம் தலைநிமிர்ந்து முன்னேற முடியும். ஏன்? தமிழ் நம் தாய்மொழி. தமிழ் நம் உயிர். தமிழ் நம் மூச்சு. தமிழ் நம் வாழ்வு. நாம் தமிழர்கள், நாம் வாழ்க! நாம் வெல்க! தமிழ் வாழ்வதற்காக! தமிழினம் வெல்வதற்காக!

*தமிழ் எங்கள் இளமைக்குப் பால்! - இன்பத்*
*தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல்!*
*தமிழ் எங்கள் உயர்வுக்கு வான்! - இன்பத்*
*தமிழ் எங்கள் அசதிக்குச் சுடர்தந்ததேன்!*
*தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள்! - இன்பத்*
*தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்!*
*தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய்! - இன்பத்*
*தமிழ் எங்கள் வளமிக்க உளமுற்றதீ!*

(பாரதிதாசன்)

